# SELECTIONS FROM THE KURAL

# நூறு குறள்

## ONE HUNDRED STANZAS

WITH

FULL EXPLANATIONS




THE CHRISTIAN LITERATURE SOCIETY FOR INDIA

MADRAS ALLAHABAD RANGOON COLOMBO

# நூறு குறள்

1. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

பதவுரை. அகரம், அகாரம்; முதல, முதலாக உடையது; எழுத்து, அட்சரம்; எல்லாம், யாவும்; ஆதிபகவன், முதற் கடவுள்; முதற்று, முதலாக உடையது; உலகு, உலகம்.

பொழிப்புரை. எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக உடையன; உலகமானது ஆதிபகவனை முதலாக உடையது.

2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழா அரெனின்.

பத. கற்றதனால், படித்ததனால்; ஆய, உண்டாகிய; பயன், பிரயோசனம்; என், யாது; (கொல், அசைநிலை.) வால், மெய் யான; அறிவன், அறிவையுடையவனது; நல், நல்ல; தாள், பாதத்தை; தொழாஅரேனின், வணங்காராயின்.

பொழி. மெய்யறிவையுடைய கடவுளது திருப்பாதத்தை வணங்காராயின், எல்லா நூல்களையும் கற்றதனால் ஆகிய பிர யோசனம் என்ன?

கருத்து. கல்வி அறிவுக்குப் பயன் கடவுளை வணங்குதல்.

**3. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்**
**மனக்கவலை மாற்ற லரிது.**

பத. தனக்கு, தனக்கு; உவமை, நிகர்; இல்லாதான், இல்லாதவன்; தாள், பாதத்தை; சேர்ந்தார்க்கு, சேர்ந்தவர்க்கு; அல்லால், அல்லாமல்; மனக்கவலை, மனத்துன்பம்; மாற்றல், நீக்கல்; அரிது, அருமை.

பொழி. (ஒருவிதத்தாலும்) தனக்கு நிகரில்லாதவனது பாதத்தைச் சேர்ந்தவருக்கல்லாமல் மனத்துன்பங்களை நீக்குகிறது அரிது.

கருத்து. கடவுள் பாதத்தை யடையாதவர் தம் மனத்துன்பத்தை நீக்குதல் கூடாது.

**4. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே**
**பசும்புற் றலைகாண் பரிது.**

பத. விசும்பில், மேகத்தில் நின்று; துளி, (மழைத்) துளி; வீழின், விழுந்தால்; அல்லால், அல்லாமல்; மற்று, மற்று; ஆங்கே, அப்பொழுதே; பசும், பசுமையான; புல், புல்; தலை, தலை; காண்பு, காணுதல்; அரிது, அருமை.

பொழி. மேகத்தினின்று நீர்த்துளி விழாமற்போனால் அப்பொழுதே பசும்புல்லின் தலையையும் காணுதல் அரிது.

**5. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்**
**வரனென்னும் வைப்புக்கோர் வித்து.**

பத. உரன், அறிவு; என்னும், என்கின்ற; தோட்டியான், அங்குசத்தால்; ஓர், ஒரு; ஐந்தும், ஐந்தையும்; காப்பான்,

காப்பவன்; வரன், உயர்வு; என்னும், என்கின்ற; வைப்புக்கு, நிலத்துக்கு; ஓர், ஒரு; வித்து, விதை.

பொழி. அறிவென்னும் அங்குசத்தால் (பொறிகளாகிய யானை) ஐந்தையும் காப்பவன் மேலாயதென்று சொல்லப்பட்ட மோட்சநிலத்துக்கு ஒரு வித்தாவான்.

சுருக்கு. ஐம்பொறிகளை படக்கிக்காப்பவன் மோட்சத்துக்குரியவன்.

6. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

பத. செயற்கு, செய்தற்கு; அரிய, அருமையானவை; செய்வார், செய்பவர்; பெரியர், பெரியவர்; சிறியர், சிறியவர்; செயற்கு, செய்தற்கு; அரிய, அருமையானவை; செய்கலாதார், செய்யமாட்டாதவர்.

பொழி. செய்தற்கரிதானவைகளைச் செய்பவர் பெரியோர்; செய்தற்கரிதானவைகளைச் செய்யமாட்டாதவர் சிறியோர்.

7. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

பத. ஒல்லும், இயலும்; வகையான், திறத்தால்; அற, தருமமாகிய; வினை, நல்வினையை; ஓவாதே, இடைவிடாமல்; செல்லும், செல்கின்ற; வாய், இடங்களால்; எல்லாம், எல்லாம்; செயல், செய்க.

பொழி. தத்தமக்கு இயலுந்திறத்தால் தருமமாகிய நல்வினையை இடைவிடாமல் செல்லும்வகையாலெல்லாஞ் செய்க.

கருத்து. மனம் வாக்கு காயங்களால் இயன்றமாத்திரம் தருமஞ் செய்யவேண்டும்.

**8. மனத்துக்கண் மாசில னாத லனைத்தற**
**னாகுல நீர பிற.**

பத. மனத்துக்கண், மனசினிடத்தில்; மாசு, குற்றம்; இலன், இல்லாதவன்; ஆதல், ஆகுதல்; அனைத்து, அவ்வளவே; அறன், தருமம்; ஆகுலம், ஆரவாரம்; நீர, தன்மைய; பிற, மற்றவை.

பொழி. மனசிலே குற்றமற்றவனாயிருப்பதே தருமம், சொல்லும் வேஷமும் என்ற மற்றவை யாவும் ஆரவாரகுணத்தை உடையவை.

**9. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது**
**பொன்றுங்காற் பொன்றாத் துணை.**

பத. அன்று, அந்நாளில்; அறிவாம், அறிவோம்; என்னாது, என்று நினையாமல்; அறம், தருமம்; செய்க, செய்க; (மற்று அசைநிலை.) அது, அது; பொன்றுங்கால், இறக்குங் காலத்தில்; பொன்றா, அழியாத; துணை, உதவி.

பொழி. (இறக்கும்) நாளில் தருமத்தைச் செய்வோம் என்று நினையாமல், (தினந்தோறும்) செய்க; அது, இறக்குங்காலத்தில் அழியாத துணையாம்.

**10. செயற்பால தோரு மறனே யொருவற்**
**குயற்பால தோரும் பழி.**

பத. செயல், செய்தல்; பாலது, பான்மையது; அறனே, தருமமே; ஒருவற்கு, ஒருவனுக்கு; உயற்பாலது, நீங்கற்பான்மையது; பழி, தீவினை. (ஓரும் என்ற இரண்டும் அசைநிலை.)

பொழி. ஒருவனுக்குச் செய்தற்குரியது நல்வினை, விடுதற்குரியது தீவினை.

11. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

பத. அன்பும், அன்பும்; அறனும், தருமமும்; உடைத்தாயின், உடையதானால்; இல்வாழ்க்கை, இல்வாழ்க்கையானது; பண்பும், குணமும்; பயனும், பிரயோசனமும்; அது, அது.

பொழி. ஒருவனுடைய இல்வாழ்க்கையானது தன் துணைவிமேற் செய்யத்தகும் அன்பையும், பிறர்க்குப் பகுத்துண்ணலாகிய தருமத்தையும் உடையதானால், அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனுமாகும்.

கருத்து. இல்வாழ்க்கைக்கு மனைவிமேலுள்ள அன்பு பண்பும்; பிறர்க்குப் பகுத்துண்டல் பயனுமாம்.

12. இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ
னில்லவண் மாணாக் கடை.

பத. இல்லது, இல்லாதது; என், யாது; இல்லவள், மனைவி; மாண்பானால், மாட்சிமையுடையவளானால்; உள்ளது, உண்டானது; என், யாது; இல்லவள், மனைவி; மாணா, மாட்சிமைப்படாள்; கடை, ஆயின்.

பொழி. ஒருவனுக்கு, மனையாள் (நற்குண நற்செய்கை என்ற) சிறப்பை உடையவளாயிருந்தால், இல்லாதது என்ன? அது இல்லாதவளாயிருந்தால், என்ன உண்டு?

13. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

பத. சிறை, சிறையானது; காக்கும், காக்கின்ற; காப்பு, காவல்; எவன், என்ன; செய்யும், செய்யும்; மகளிர், மாதர்கள்; நிறை, நிறுத்துதல்; காக்கும், காக்கின்ற; காப்பே, காவலே; தலை, முதன்மை.

பொழி. (தலைவர் செய்த சிறையால்) காக்கின்ற காவல் என்ன பிரயோசனத்தைச் செய்யும். (மாதர்கள் தங்கள் கற்பிலே மனத்தை) நிறுத்துகையினாலே காக்கின்ற காவலே முதன்மையானது.

14. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

பத. தந்தை, தகப்பன்; மகற்கு, மகனுக்கு; ஆற்றும், செய்யும்; நன்றி, நன்மை; அவையத்து, சபையினிடத்து; முந்தி, முற்பட்டு; இருப்ப, இருக்க; செயல், செய்வது.

பொழி. தகப்பன் புத்திரனுக்குச் செய்யும் நன்மையாவது, அவனைக் கல்வியில் வல்லவனாக்கிக் கற்றவரது சபையினிடத்து முற்பட இருக்கச்செய்தலே.

15. தம்மிற் றம்மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

பத. தம்மின், தம்மினும்; தம், தமது; மக்கள், புத்திரர்; அறிவுடைமை, அறிவுடைத்தாயிருப்பது; மா, பெருமை; நிலத்து, உலகத்தில்; மன், நிலைபெறுகின்ற; உயிர்க்கு, உயிர்களுக்கு; எல்லாம், எல்லாம்; இனிது, இனியது.

பொழி. தமது புத்திரர் அறிவுடையவராயிருப்பது உலகத்தில் நிலைபெற்ற உயிர்களுக்கெல்லாம் இனிது.

**16. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்**
**சான்றோ னெனக்கேட்ட தாய்.**

பத. ஈன்ற, பெற்ற; பொழுதில், பொழுதினும்; பெரிது, மிக; உவக்கும், மகிழுவள்; தன், தனது; மகனை, புத்திரனை; சான்றோன், நிறைந்தோன்; என, என்று சொல்ல; கேட்ட, கேள்விப்பட்ட; தாய், தாயானவள்.

பொழி. தன் மகனைக் கல்வி கேள்விகளால் நிறைந்தானென்று சொல்லக் கேள்விப்பட்ட தாய், பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியினும் மிகவும் மகிழுவாள்.

**17. அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்**
**புன்கணீர் பூச றரும்.**

பத. அன்பிற்கும், அன்புக்கும்; உண்டோ, உளதோ; அடைக்கும், அடைத்துவைக்கும்; தாழ், தாழ்; ஆர்வலர், அன்புடையவர்; புல், புல்லிய; கணீர், கண்ணீர்; பூசல்தரும், தூற்றும்.

பொழி. அன்பினுக்கும் அடைக்குந் தாழ்க்கோல் உண்டோ, நேசிக்கப்பட்டவரின் துன்பங்கண்டபோது அன்புடையாரின் கண்ணீரே தமக்குள்ள அன்பை யாவரும் அறியத் தூற்றும்.

**18. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா**
**ரென்பு முரியர் பிறர்க்கு.**

பத. அன்பு, அன்பு; இலார், இல்லாதவர்; எல்லாம், யாவும்; தமக்கு, தங்களுக்கு; உரியர், உரியராவர்; அன்பு,

அன்பை ; உடையார், உடையவர் ; என்பும், எலும்பும் ; உரியர், உரியவர் ; பிறர்க்கு, மற்றவர்க்கு.

பொழி. அன்பில்லாதவர் எல்லாப் பொருளாலும் தமக்கே உரியராவர் ; அன்புடையவர் தம்முடைய உடம்பாலும் பிறர்க்கு உரியவர்.

19. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

பத. மோப்ப, மோந்துபார்க்க ; குழையும், வாடும் ; அனிச்சம், அனிச்சப்பூவானது ; முகம், முகம் ; திரிந்து, வேறுபட்டு ; நோக்க, பார்க்க ; குழையும், வாடுவான் ; விருந்து, விருந்தினன்.

பொழி. அனிச்சமலரை மோந்தால் வாடும், விருந்தினனை முகம் வேறுபட்டுப்பார்க்க வாடுவான்.

20. பணிவுடைய னின்சொல்ல னாத லொருவற்
கணியல்ல மற்றும் பிற.

பத. பணிவு, வணக்கம் ; உடையன், உடையவன் ; இன், இனிய ; சொல்லன், சொல்லையுடையவன் ; ஆதல், ஆகுதல் ; ஒருவற்கு, ஒருவனுக்கு ; அணி, ஆபரணம் ; அல்ல, அல்ல ; (மற்று, அசை.) பிற, மற்றவை.

பொழி. வணக்கமுடையவனாகி, இன்சொல்லையுமுடையவனாதல், ஒருவனுக்கு ஆபரணமாம் ; மற்றவை ஆபரணங்களல்ல.

கருத்து. பெரியவர்களிடத்து வணக்கமுடையவனாய் மற்றெல்லாரிடத்தும் இனிய சொல்லையுடையவனாதல் ஒருவனுக்கு ஆபரணமாம்.

21. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

பத. இனிய, இன்சொற்கள்; உளவாக, உண்டாயிருக்க; இன்னாத, தீயசொற்கள்; கூறல், கூறுதல்; கனி, பழம்; இருப்ப, இருக்க; காய், காயை; கவர்ந்தற்று, தின்றதன்மை.

பொழி. (புண்ணியத்தைத்தரும்) இனிய சொற்கள் தன்னிடத்து உண்டாயிருக்க, (பாவத்தைத்தரும்) கடுஞ்சொற்களைச் சொல்லுதல், பழமிருக்கக் காயைத் தின்றதுபோலாகும்.

22. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

பத. செய்யாமல், செய்யாதிருக்க; செய்த, செய்த; உதவிக்கு, நன்றிக்கு; வையகமும், மண்ணுலகும்; வானகமும், விண்ணுலகும்; ஆற்றல், கொடுத்தல்; அரிது, (ஈடாக) மாட்டாது.

பொழி. (தனக்கு முன்னொரு உதவி) செய்யாதிருக்க (ஒருவன் பிறனுக்குச் செய்த) உதவிக்கு, மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் (கைமாறாகக்) கொடுத்தாலும் ஈடாகாது.

23. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

பத. தினை, தினை; துணை, அளவு; நன்றி, உபகாரம்; செயினும், செய்தானாலும்; பனை, பனை; துணையா, அளவாக; கொள்வர், கொள்வார்கள்; பயன், பயனை; தெரிவார், தெரியத்தக்கவர்.

பொழி. தினையளவு உபகாரத்தைச் செய்தாலும், அதைப் பனையளவாகக் கருதுவர், அதின் பிரயோசனத்தை அறியத் தக்கவர்.

24. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

பத. மறவற்க, மறவாதிருக்கக்கடவன்; மாசற்றார், குற்ற மற்றவரது; கேண்மை, உறவை; துறவற்க, விடாதிருக்கக் கடவன்; துன்பத்துள், துன்பத்தில்; துப்பு, ஊன்றுகோல்; ஆயார், ஆயினவருடைய; நட்பு, சிநேகம்.

பொழி. குற்றமற்றவருடைய உறவை மறவாதிருக்கக் கடவன், துன்பத்தில் ஊன்றுகோலானவருடைய சிநேகத்தை விடாதிருக்கக்கடவன்.

கருத்து. குற்றமற்றவர் சிநேகத்தையும் விடக்கூடாது, துன்பத்தில் உதவினவருடைய சிநேகத்தையும் விடக்கூடாது.

25. நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

பத. நன்றி, நன்மையை; மறப்பது, மறந்துவிடுவது; நன்று, தருமம்; அன்று, அல்ல; நன்று, நன்மை; அல்லது, அல்லாததை; அன்றே, அப்பொழுதே; மறப்பது, மறந்து விடுவது; நன்று, தருமம்.

பொழி. (ஒருவன் முன் செய்த) நன்மையை மறந்துவிடுவது தருமம் அல்ல; அவன் செய்த தீமையை அப்பொழுதே மறப்பது தருமம்.

26. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு.

பத. எ, எந்த; நன்றி, நன்றி; கொன்றார்க்கும், அழித்த வர்க்கும்; உய்வு, ஒழிவு; உண்டாம், உண்டாகும்; உய்வு, ஒழிவு; இல்லை, இல்லை; செய், செய்த; நன்றி, உதவியை; கொன்ற, கெடுத்த; மகற்கு, மனிதனுக்கு.

பொழி. எந்த தருமங்களைச் சிதைத்தார்க்கும் நீங்கும் வழி யுண்டாகும்; ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தவனுக்கு அதில்லை.

27. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து.

பத. செப்பம், நடுவுநிலைமை; உடையவன், உடையவ னின்; ஆக்கம், செல்வம்; சிதைவு, அழிவு; இன்றி, இல் லாமல்; எச்சத்திற்கு, சந்ததிக்கு; ஏமாப்பு, இன்பமானதை; உடைத்து, உடையது.

பொழி. நடுவுநிலைமையை யுடையவனது செல்வம், அழி வில்லாமல் அவன் சந்ததிக்கும் உதவும்.

28. நன்றே தரினு நடுவிகந் தாமாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

பத. நன்றே, நன்மையே; தரினும், கொடுத்தாலும்; நடுவு, நடுவுநிலைமையை; இகந்து, நீங்கி; ஆம், உண்டாகும்; ஆக் கத்தை, செல்வத்தை; அன்றே, அப்பொழுதே; ஒழியவிடல், நீங்கவிடுக.

பொழி. நன்மையே தந்தாலும் நடுவுநிலையிலிருந்து நீங்கி உண்டாகுஞ் செல்வத்தை அப்பொழுதே விடவேண்டும்.

**29. சமஞ்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொரு
பாற் கோடாமை சான்றோர்க் கணி.**

பத. சமம், சமன்; செய்து, (நிறுத்தல்) செய்து; சீர்தூக்கும், வரையறுக்கும்; கோல், துலாம்; போல், போல; அமைந்து, பொருந்தி; ஒரு, ஒரு; பால், பக்கம்; கோடாமை, சாயாமை; சான்றோர்க்கு, மேன்மக்களுக்கு; அணி, அழகு.

பொழி. தான் சமனாகநின்று தன்னிடத்து வைத்த பொருளை வரையறுக்கும் துலாம்போல, இலக்கணங்களைப் பொருந்தி ஒரு பக்கத்திலே சோராதிருப்பது பெரியோர்களுக்கு அழகு.

கருத்து. பகையாளி, அந்நியன், சிநேகிதன் என்ற மூவர்க்கும் ஒப்பச்சொல்லுதல்.

**30. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.**

பத. வாணிகம், வியாபாரம்; செய்வார்க்கு, செய்பவர்க்கு; வாணிகம், வியாபாரம்; பேணி, விரும்பி; பிறவும், பிறர்பொருளையும்; தமபோல், தம்பொருள்போல; செயின், செய்தால்.

பொழி. பிறர்பொருளையும் தம்பொருள்போல நாடி வியாபாரஞ்செய்தால், வியாபாரிகளுக்கு நன்றாய் வியாபாரம் பலிக்கும்.

31. எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து

பத. எல்லார்க்கும், அனைவர்க்கும்; நன்றாம், நல்லதாகும்; பணிதல், அடங்குதல்; அவருள்ளும், அவ்வனைவருள்ளும்; செல்வர்க்கே, செல்வமுடையவர்க்கே; செல்வம், செல்வம்; தகைத்து, சிறப்பையுடையது.

பொழி. அடங்குதல் எல்லார்க்கும் நன்றாயினும், செல்வமுடையார்க்கு அது வேறொரு செல்வமாகத் தோன்றும்.

32. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

பத. யா, யாவையும்; காவாராயினும், காக்கமாட்டாராயினும்; நா, நாவு; காக்க, காக்கக்கடவர்; காவாக்கால், காக்காவிட்டால்; சோகாப்பர், துன்பப்படுவர்; சொல், சொல்; இழுக்கு, குற்றத்தில்; பட்டு, அகப்பட்டு.

பொழி. எல்லாவற்றையும் காக்காவிட்டாலும், நாவு ஒன்றையே காக்கக்கடவர்; அதைக் காக்காவிட்டால் சொற்குற்றத்தில் அகப்பட்டுத் துன்பம் அடைவார்.

33. தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

பத. தீயினால், நெருப்பினால்; சுட்ட, சுட்ட; புண், புண்ணானது; உள், மனதில்; ஆறும், ஆறிப்போம்; ஆறாதே, ஆறாதே; நாவினால், நாவினாலே; சுட்ட, சுட்ட; வடு, காயம்.

பொழி. நெருப்பினாலே சுட்டபுண் மனதிலே ஆறிப்போகும்; நாவினாலே சுட்ட வடுவானது ஆறாதிருக்கும்.

34. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

பத. நன்றிக்கு, தருமத்துக்கு; வித்தாகும், விதையாகும்; நல், நல்ல; ஒழுக்கம், ஒழுக்கமானது; தீ, தீய; ஒழுக்கம், ஒழுக்கமானது; என்றும், எக்காலத்தும்; இடும்பை, துன்பம்; தரும், விளைவிக்கும்.

பொழி. நல்லொழுக்கமானது தருமத்திற்குக் காரணமாய் என்றும் இன்பத்தைத் தரும்; தீய ஒழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் என்றும் துன்பத்தைத் தரும்.

35. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை.

பத. அகழ்வாரை, தோண்டுகின்றவரை; தாங்கும், சுமக்கும்; நிலம், பூமி; போல, போல்; தம்மை, தங்களை; இகழ்வார், நிந்திப்பவரை; பொறுத்தல், சகித்தல்; தலை, தலைமை.

பொழி. தன்னைத் தோண்டுகிறவரைச் சுமக்கும் பூமியைப்போலத் தம்மை நிந்திப்பாரைப் பொறுத்தலே தலைமையாகிய தருமம்.

36. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

பத. பொறுத்தல், பொறுக்கக்கடவர்; இறப்பினை, மிகையை; என்றும், கிடைத்தும்; அதனை, அதை; மறத்தல், மறந்துவிடுவது; அதனினும், அந்தப் பொறுமையினும்; நன்று, நன்றாகும்.

பொழி. தாம் வருத்துகிறதற்கு இயன்ற காலம் கிடைத்-

தும், பிறர்செய்த தீங்கைப் பொறுப்பது நன்று; அதை மறந்துவிடுவது அப்பொறுமையைப் பார்க்கிலும் நன்று.

37. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்
பொன்றுந் துணையும் புகழ். [குப்

பத. ஒறுத்தார்க்கு, வருத்தினவர்க்கு; ஒரு, ஓர்; நாளை, தினத்து; இன்பம், இன்பம்; பொறுத்தார்க்கு, பொறுத்தவர்க்கு; பொன்றும், அழியும்; துணையும், அளவும்; புகழ், புகழ்.

பொழி. தண்டித்தவர்க்கு உண்டாவது ஒரு தினத்து இன்பம்; பொறுத்தவர்க்கு (உலகம்) அழியுமளவும் புகழ் உண்டாகும்.

38. அழுக்கற் றகன்றாரு மில்லை யஃதில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

பத. அழுக்கற்று, பொறாமைப்பட்டு; அகன்றாரும், பெருகினவரும்; இல்லை, இல்லை; அஃது, அது; இல்லார், இல்லாதார்; பெருக்கத்தின், பெருக்கத்தினின்று; தீர்ந்தாரும், நீங்கினவரும்; இல், இல்லை.

பொழி. பொறாமைப்பட்டுப் பெருத்தவருமில்லை; அப்பொறாமையில்லாமல் சிறுத்தவருமில்லை.

39. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

பத. வேண்டற்க, விரும்பாதிருக்க; வெஃகி, இச்சித்து; ஆம், ஆகும்; ஆக்கம், செல்வம்; விளைவயின், அநுபவிக்குமிடத்து; மாண்டற்கு, மாட்சிமைப்படுதற்கு அரிதாம், அரியதாகும்; பயன், பலன்.

பொழி. பிறர் பொருளை விரும்பிக்கொண்டதினாலே உண்டாகும் செல்வத்தை விரும்பாதிருக்க, அதன் பயன் நன்றாக முடியாது.

**40. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்**
**திறந்தெரிந்து கூறப் படும்.**

பத. பிறன், பிறனுடைய; பழி, பழியை; கூறுவான், சொல்பவன்; தன், தன்னுடைய; பழியுள்ளும், பழிகளுள்ளும்; திறம், தன்மை; தெரிந்து, ஆராய்ந்து; கூறப்படும், சொல்லப்படுவான்.

பொழி. பிறன்பழியைச் சொல்பவன் தன்னுடைய பழிகள் பலவற்றுள்ளும் (வருத்தப்படுத்தும்) தன்மையுடைய பழிகளை (அவன்மேல) சொல்லப்படுவான்.

**41. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்**
**றீதுண்டோ மன்னு முயிர்க்கு.**

பத. ஏதிலார், அந்நியர்; குற்றம், குற்றம்; போல், போல; தம், தம்முடைய; குற்றம், குற்றத்தையும்; காண்கிற்பின், காண்பாராயின்; தீது, துன்பம்; உண்டோ, உண்டாமோ; மன்னும், நிலைபெறும்; உயிர்க்கு, உயிர்க்கு.

பொழி. அந்நியர் குற்றத்தை ஆராய்தல்போல தம்முடைய குற்றத்தையும் ஆராய்வாரின் உயிருக்குத் துன்பமுண்டோ.

**42. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க**
**சொல்லிற் பயனிலாச் சொல்.**

பத. சொல்லுக, சொல்லக்கடவர்; சொல்லிற், சொற்களில்; பயனுடைய, பிரயோசனமுடைய சொற்களை; சொல்லற்க, சொல்லாதிருக்கக்கடவர்; சொல்லில், சொற்களில்; பயன், பிரயோசனம்; இலா, இல்லா; சொல், சொற்களை.

பொழி. சொற்களில் பயனுடைய சொற்களைச் சொல்லக்கடவர்; சொற்களில் பிரயோசனமில்லாத சொற்களைச் சொல்லாதிருக்கக்கடவர்.

43. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

பத. தீயவை, தீவினைகள்; தீய, துன்பங்கள்; பயத்தலால், தருதலால்; தீயவை, தீவினைகள்; தீயினும், நெருப்பிலும்; அஞ்சப்படும், பயமடையப்படும்.

பொழி. தீவினைகள் துன்பம் தருதலால், நெருப்பிலும் பயமடையப்படும்.

44. இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து.

பத. இலன், இல்லன்; என்று, என்று; தீயவை, தீவினைகள்; செய்யற்க, செய்யாதிருக்கக்கடவன்; செய்யின், செய்வானாயின்; இலன், இல்லன்; ஆகும், ஆவான்; (மற்றும், அசை நிலை.) பெயர்த்து, மறுபடியும்.

பொழி. பொருள் இல்லாதவனென்று தீவினைகளைச் செய்யாதிருக்கக்கடவன்; செய்வானாயின் மறுபடியும் இல்லாதவனாவான்.

**45. தீயவை செய்தார் கெடுத னிழறன்னை**
**வீயா தடியுறைந் தற்று.**

பத. தீயவை, தீவினை; செய்தார், செய்தவர்; கெடுதல், கெடுவது; நிழல், சாயையானது; தன்னை, தன்னை; வீயாது, நீங்காது; அடி, பாதத்தில்; உறைந்தற்று, தங்கின தன்மைத்து.

பொழி. தீவினை செய்தவர் கெடுவது, ஒருவனுடைய நிழலானது அவனை நீங்காமல் பாதத்திலே தங்கின தன்மையாகும்.

**46. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்**
**டென்னாற்றுங் கொல்லோ வுலகு.**

பத. கைம்மாறு, பிரதியுபகாரம்; வேண்டா, விரும்பாவாம்; கடப்பாடு, முறைமைப்பாடுகள்; மாரி, மேகம்; மாட்டு, இடத்து; என், என்ன; ஆற்றும், செய்யும்; (கொல், ஓ, இரண்டும் அசைநிலை.) உலகு, உயிர்கள்.

பொழி. கடமையானது பிரதியுபகாரத்தை நோக்கினதல்ல; உலகத்தோர் மேகத்துக்கு என்ன பிரதியுபகாரத்தைச் செய்கிறார்கள்.

**47. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக**
**மில்லெனினு மீதலே நன்று.**

பத. நல், நல்ல; ஆறு, வழி; எனினும், என்றாலும்; கொளல், இரப்பது; தீது, தீமை; மேல், மேலாகிய; உலகம், உலகம்; இல், இல்லை; எனினும், என்றாலும்; ஈதலே, கொடுத்தலே; நன்று, நல்லது.

பொழி. இரப்பது (மோட்சத்துக்கு) நல்லவழியென்று சொல்லப்படினும் அது தீது; மோட்ச உலகம் இல்லையென்று சொல்லப்படினும் கொடுத்தலே நல்லது.

48. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

பத. ஈத்து, கொடுத்து; உவக்கும், மகிழும்; இன்பம், சுகத்தை; அறியார்கொல், அறியாரோ; தாம், தம்முடைய; உடைமை, பொருள்; வைத்து, வைத்து; இழக்கும், இழந்துவிடும்; வன்கணவர், அருளில்லாதார்.

பொழி. தரித்திரருக்குக் கொடுத்து மகிழும் இன்பத்தைத் தங்கள் பொருளைக் (கொடுக்காமல்) வைத்துப் (பின்) இழந்துபோகும் அருளில்லாதார் கண்டு அறியார்களோ.

49. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது.

பத. பொருள், திரவியம்; அற்றார், அல்லாதவர், பூப்பர், சிறப்பையடைவர்; ஒருகால், ஒருகாலத்து; அருள், அருள்; அற்றார், இல்லாதவர்; அற்றார், அழிந்தவரே; மற்று, பின்; ஆதல், ஆகுதல்; அரிது, இல்லை.

பொழி. திரவியமில்லாதவர் ஒருகாலத்துச் செல்வமுடையவராவர்; அருளில்லாதவர் அழிந்தவரே. பின்னொரு காலத்தும் விருத்தியடைவதில்லை.

50. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

பத. வலியார், வல்லமையுடையவர்; முன், முன்பு; தன்னை, தன்னை; நினைக்க, நினைக்கக்கடவன்; தான், தான்; தன்னின், தன்னினும்; மெலியார், எளியவர்; மேல், மேலே; செல்லுமிடத்து, போகுமிடத்து.

பொழி. எளியாரை (வருத்தப்படுத்த) அவர்கள்மேல் போகும்போது, வலியவர்முன் தான் அஞ்சி நின்றதை நினைக்க.

**51. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்**
**தானறி குற்றப் படின்.**

பத. வான், வானைப்போல்; உயர், உயர்ந்த; தோற்றம், வேஷமானது; எவன், என்ன; செய்யும், (பிரயோசனத்தைச்) செய்யும்; தன், தன்னுடைய; நெஞ்சம், மனம்; தான், தான்; அறி, அறிந்த; குற்ற, குற்றத்தினிடத்து; படின், தங்குமாயின்.

பொழி. வான்போலுயர்ந்த தவவேஷம் என்ன பயனைச் செய்யும்; தன்னுடைய மனம் தானறிந்த குற்றத்தினிடத்துத் தங்குமாயின்.

**52. கணைகொடி தியாழ்கோடு செவ்விதாங் கன்ன**
**வினைபடு பாலாற் கொளல்.**

பத. கணை, அம்பு; கொடிது, (கோணலில்லாதாயினும்) கொடுமையையுடையது; யாழ், வீணை; கோடு, கோணல்; செவ்விது, செப்பத்தையுடையது; ஆங்கு, அப்படி; அன்ன, போல; வினை, செயல்; படு, பட்ட; பாலால், பகுதியால்; கொளல், கொள்க.

பொழி. அம்பு (செவ்விதாயிருந்தாலும்) கொடியது; வீணை கோணலாயிருந்தாலும் செப்பமுடையது; அதுபோல செயலின் தன்மையினாலே குணத்தை அறிந்துகொள்க.

53. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

பத. மழித்தலும், முண்டித்தலும்; நீட்டலும், சடை செய்தலும்; வேண்டா, வேண்டாவாம்; உலகம், உயர்ந்தோர்கள்; பழித்தது, குற்றஞ்சொல்லியது; ஒழித்துவிடின், நீக்கி விடின்.

பொழி. உயர்ந்தோர் (தவத்துக்காகாதென்று) குற்றஞ் சொல்லியதை நீக்கிவிட்டால், (தலைமயிரைச்) சிரைத்தலும் நீளச்செய்தலும் வேண்டியதில்லை.

54. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

பத. உள்ளத்தால், மனதினால்; உள்ளலும், நினைத்தலும்; தீதே, பாவமே; பிறன், பிறனுடைய; பொருளை, உடைமையை; கள்ளத்தால், வஞ்சனையினாலே; கள்வேம், களவுசெய்வோம்; எனல், என்காதே.

பொழி. பிறன்பொருளை வஞ்சித்துக் களவுசெய்வோம் என்று சொல்லாதே; மனதினால் அப்படி நினைத்தலும் பாவம்.

55. களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

பத. களவினால், களவுசெய்தலினால்; ஆகிய, உண்டாகிய; ஆக்கம், பொருளானது; அளவு, எல்லை; இறந்து, கடந்து; ஆவது, வளர்வது; போல, போலே; (தோன்றி) கெடும், அழியும்.

பொழி. களவினால் உண்டாகிய பொருள் வளர்வது போலத் தோன்றி தன் எல்லையைக் கடந்து கெடும்.

**56. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்**
**வீயா விழுமந் தரும்.**

பத. களவின்கண், களவுசெய்தலிடத்து; கன்றிய, மிகுந்த; காதல், ஆசையானது; விளைவின்கண், அநுபவிக்கும்போது; வீயா, நீங்காத; விழுமம், துன்பம்; தரும், கொடுக்கும்.

பொழி. களவு செய்வதிலே மிகுந்த இச்சையானது பயன் கொடுக்கும்பொழுது தொலையாத துன்பத்தைக் கொடுக்கும்.

**57. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்**
**றன்னெஞ்சே தன்னைச் சுடும்.**

பத. தன், தன்னுடைய; நெஞ்சு, மனம்; அறிவது, அறிவதை; பொய்யற்க, பொய்யாதிருக்கக்கடவன்; பொய்த்தபின், பொய்சொன்னபின்; தன், தன்னுடைய; நெஞ்சே, மனமே; தன்னை, தன்னை; சுடும், வருத்தும்.

பொழி. தன் மனம் அறிவதை (மறைத்து) பொய் சொல்லாமலிருக்கக்கடவன்; பொய் சொன்னானாயின் தன் மனமே தன்னை வருத்தும்.

**58. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு.**

பத. எல்லா, எல்லா; விளக்கும், விளக்குகளும்; விளக்கு, விளக்கு; அல்ல, அல்ல; சான்றோர்க்கு, பெரியோர்க்கு;

பொய்யா, பொய்யாத; விளக்கே, விளக்கே; விளக்கு, விளக்கு.

பொழி. (சூரியன், சந்திரன், தீ என்ற) விளக்குகளெல்லாம் விளக்குகளல்ல; பொய்யாமையாகிய சத்தியவிளக்கே விளக்கு.

59. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்.

பத. தன்னை, தன்னை; தான், தானே; காக்கின், காக்க நினைப்பானாயின்; சினம், கோபம்; காக்க, அடக்க; காவாக்கால், காக்காவிட்டால்; தன்னையே, தன்னையே; கொல்லும், கெடுக்கும்; சினம், கோபம்.

பொழி. தன்னைத்தான் காக்கும்படி நினைப்பானாயின் கோபத்தை அடக்கக்கடவன்; அதைக் காக்காவிட்டால் (அந்தக்) கோபம் தன்னையே கெடுக்கும்.

60. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

பத. சிறப்பு, சிறப்பை; ஈனும், தருகின்ற; செல்வம், செல்வத்தை; பெறினும், பெறலாமாயினும்; பிறர்க்கு, அந்நியருக்கு; இன்னா, துன்பம்; செய்யாமை, செய்யாதிருத்தல்; மாசற்றார், குற்றமற்றவருடைய; கோள், கொள்கை.

பொழி. (பிறர்க்குத்) துன்பஞ்செய்து சிறப்பைத் தரும் செல்வங்களைப் பெறக்கூடுமாயினும், மாசற்றவர் அதைச் செய்யாதிருப்பதே அவர் கோட்பாடு.

61. கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

பத. கறுத்து, கோபித்து; இன்னா, துன்பங்களை; செய்த, செய்த; அ, அந்த; கண்ணும், இடத்தும்; மறுத்து, மீண்டும்; இன்னா, துன்பங்களை; செய்யாமை, செய்யாமையும்; மாசற்றார், குற்றமற்றவரது; கோள், துணிபு.

பொழி. (தமக்குப் பிறர்) துன்பங்களைச் செய்தவிடத்தும் அதற்கு எதிராகச் செய்யாதிருத்தல் குற்றமற்றவருடைய கொள்கை.

62. இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

பத. இன்னா, துன்பங்கள்; செய்தாரை, (தமக்குச்) செய்தவர்களை; ஒறுத்தல், வருத்துதலாவது; அவர், அவர்; நாண, நாணும்படி; நல், நல்ல; நயம், மகிழ்ச்சியை; செய்து, செய்து; விடல், விடுக.

பொழி. துன்பம் செய்தவர்களுக்குத் துன்பஞ் செய்தலாவது, அவர்கள் நாணும்படி நல்ல மகிழ்ச்சியுண்டாகும்படி செய்து, (தீங்குகளை மறந்து) விடுவது.

63. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணாசெய் யாமை தலை.

பத. எனைத்தானும், எவ்வளவாயினும்; எஞ்ஞான்றும், எக்காலத்திலும்; யார்க்கும், எவர்க்கும்; மனத்தான், மனத்தோடு; ஆம், உண்டாகும்; மாணா, துன்பங்களை; செய்யாமை, செய்யாதிருத்தலே; தலை, முதன்மை.

பொழி. மனமறிந்து, துன்பத்தைச் சிறிதாயினும் எக்காலத்திலும் எவருக்கும் செய்யாதிருத்தலே தலை (யான தருமம்.)

64. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

பத. பிறர்க்கு, பிறருக்கு; இன்னா, துன்பங்கள்; முற்பகல், பகலின் முற்பங்கு; செய்யின், செய்வாராயின்; தமக்கு, தங்களுக்கு; இன்னா, துன்பங்கள்; பிற்பகல், பகலின்பிற்பங்கு; தாமே, தாமாய்; வரும், வரும்.

பொழி. பிறர்க்குத் துன்பங்களை முற்பகலிலே செய்தால் (பிறர் செய்யாதிருக்க) பிற்பகலிலே தங்களுக்கே துன்பம் வரும்.

65. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்.

பத. அற்கா, நிற்கா; இயல்பிற்று, இயல்பையுடையது; செல்வம், ஐசுவரியம்; அது, அதை; பெற்றால், அடைந்தால்; அற்குப, நிற்பவைகளை; ஆங்கே, அப்பொழுதே; செயல், செய்க.

பொழி. நிலையில்லாத தன்மையையுடைய செல்வத்தைப் பெற்றால், நிலைபேறுடைய தருமங்களை அப்பொழுதே செய்க.

66. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

பத. நெருநல், நேற்று; உளன், இருக்கிறவன்; இன்று, இன்றைத்தினம்; இல்லை, இல்லை; என்னும், என்கும்;

பெருமை, பெருமையை; உடைத்து, உடையது; இ, இந்த; உலகு, உலகம்.

பொழி. இவ்வுலகமானது நேற்று இருந்தவன் இன்றைக்கு இல்லையென்னும் (நிலையாமையாகிய) பெருமையுடையது.

67. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

பத. ஒருபொழுதும், ஒரு (கணப்) பொழுதும்; வாழ்வது, வாழ்வதை; அறியார், அறியாதவர்; கருதுப, நினைப்பார்கள்; கோடியும், கோடியளவும்; அல்ல, அல்ல; பல, அநேகம்.

பொழி. (இன்னம் ஒரு கணப்) பொழுதளவாவது உயிரோடிருப்பதை அறியமாட்டாதவர்கள், கோடியளவல்ல பல கோடி நினைவுகளை நினைப்பார்கள்.

68. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

பத. ஐயத்தின், சந்தேகத்தினின்று; நீங்கி, நீங்கி; தெளிந்தார்க்கு, அறிந்தவர்க்கு; வையத்தின், இவ்வுலகத்திலும்; வானம், முத்தியுலகம்; நணியது, சமீபம்; உடைத்து, உடையது.

பொழி. சந்தேகத்திலிருந்து (நீங்கி) மெய் உணர்ந்தார்க்கு வானம் பூமியைப்பார்க்கிலும் நெருங்கினது.

69. கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

பத. கற்க, கற்கக்கடவன்; கசடு, பழுது; அற, இல்லாமல்; கற்பவை, கற்கத்தகு நூல்களை; கற்றபின், கற்றபின்பு; நிற்க, நிற்கக்கடவன்; அதற்கு, அக்கல்விக்கு; தக, தகுதியாக.

பொழி. கற்கத்தகு நூல்களைப் பழுதறக் கற்கக்கடவன்; கற்றபின்பு அதற்குத் தகுதியாக (அவை சொல்லுநெறியிலே) நிற்கக்கடவன்.

70. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

பத. கண், நேத்திரம்; உடையர், உடையவர்; என்பவர், என்று சொல்லப்படுவோர்; கற்றோர், கற்றவரே; முகத்து, முகத்தினிடத்தில்; இரண்டு, இரண்டு; புண், புண்களை; உடையர், உடையவர்; கல்லாதவர், படிக்காதவர்.

பொழி. கற்றவர் கண்ணுடையவரென்றும், கல்லாதவர் முகத்தில் இரண்டு புண்ணுடையவரென்றும் சொல்லப் படுபவர்.

71. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

பத. தொட்டனைத்து, தோண்டிய அளவினதாக; ஊறும், சுரக்கும்; மணல், மணலினிடத்தில்; கேணி, துரவு; மாந்தர்க்கு, மனிதர்களுக்கு; கற்றனைத்து, கற்ற அளவினதாக; ஊறும், சுரக்கும்; அறிவு, விவேகம்.

பொழி. மணற்கேணியானது தோண்டிய அளவு நீர் ஊறும்; மனிதருக்குப் படித்த அளவு அறிவு ஊறும்.

72. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

பத. யாதானும், யாதேனும்; நாடாமால், நாடானால்; ஊராமால், ஊரானால்; என், என்ன; ஒருவன், ஒருவன்; சாம், சாகும்; துணையும், அளவும்; கல்லாதவாறு, கல்லாத விதம்.

பொழி. (கற்றவனுக்கு) எந்த நாடும் எந்த ஊரும் தன்னுடையதானால், சாகுமளவும் கல்லாதிருப்பதென்ன.

73. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார் வாய்ச் சொல்.

பத. இழுக்கல், வழுக்குதல்; உடை, உடைய; உழி, இடம்; ஊற்றுக்கோல், ஊன்றுகோல்; அற்று, அத்தன்மைத்து; ஒழுக்கம், ஒழுக்கத்தை; உடையார், உடையவர்; வாய், வாய்; சொல், வார்த்தை.

பொழி. ஒழுக்கமுடையவரின் வாய்ச்சொற்கள் வழுக்குதலுடைய (சேற்று) நிலத்திற்கு ஊன்றுகோலையொக்கும்.

74. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொ
மெய்ப்பொருள் காண்ப தறிவு. [ருள்

பத. எப்பொருள், எந்தப்பொருள்; யார்யார், யாவர்யாவர்; வாய், வாயால்; கேட்பினும், கேட்டாலும்; அப்பொருள், அந்தப்பொருள்; மெய், மெய்மை; பொருள், பயன்; காண்பது, அறிவது; அறிவு, விவேகம்.

பொழி. யாதொரு பொருளை யாவர் யாவர் வாயால் (சொல்லக்) கேட்டாலும், அப்பொருளின் மெய்யான பயனை அறிவதே விவேகம்.

75. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில.

பத. அஞ்சுவது, அஞ்சத்தகுவதை; அஞ்சாமை, அஞ்சுதல் செய்யாமை; பேதைமை, அறிவில்லாமை; அஞ்சுவது, அஞ்சத்தகுவதை; அஞ்சல், அஞ்சுதல்; அறிவார், விவேகமுடையவர்; தொழில, தொழில்.

பொழி. அஞ்சப்படுவதை அஞ்சாமை பேதைமை; அஞ்சப்படுவதை அஞ்சுவது அறிவுள்ளோர் தொழில்.

76. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

பத. அறிவு, விவேகம்; உடையார், உள்ளவர்; எல்லாம், எல்லாவற்றையும்; உடையார், உள்ளவர்; அறிவு, அறிவு; இல்லார், இல்லாதவர்; என், என்ன; உடையார், உடையவர்; ஏனும், ஆயினும்; இலர், இல்லாதவர்.

பொழி. அறிவுடையார்க்கொன்றுமில்லையாயினும் எல்லாம் உடையவர்; அறிவில்லாதவர் எல்லாம் உடைத்தாயிருந்தாலும், ஒன்றும் இல்லாதவரே.

77. நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

பத. நிலத்து, நிலத்தினது; இயல்பால், தன்மையினாலே; நீர், நீரானது; திரிந்து, வேறுபட்டு; அற்றாகும், அத்தன்மைத்

தாகும்; மாந்தர்க்கு, மனிதர்க்கு; இனத்து, இனத்தினது; இயல்பு, தன்மை; ஆகும், ஆகும்; அறிவு, விவேகம்.

பொழி. நீரானது வேறுபட்டு (தான்சேர்ந்த) நிலத்தினது தன்மையையாகும்; மனிதர்க்கு அறிவானது தம்முடைய இனத்தின் தன்மையையாகும்.

78. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல்.

பத. மனத்தான், மனத்திலே; ஆம், உண்டாகும்; மாந்தர்க்கு, மனிதர்க்கு; உணர்ச்சி, அறிவு; இனத்தான், இனத்தால்; ஆம், உண்டாகும்; இன்னான், இத்தன்மையன்; எனப்படும், என்று சொல்லப்படும்; சொல், சொல்.

பொழி. மனிதருக்கு அறிவு மனத்திலே உண்டாகும்; இத்தன்மையன் என்ற சொல் இனத்திலே உண்டாகும்.

79. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவோ மென்ப திழுக்கு.

பத. எண்ணி, ஆலோசித்து; துணிக, தொடங்கக்கடவர்; கருமம், கருமத்தை; துணிந்தபின், தொடங்கியபின்; எண்ணுவோம், ஆலோசிப்போம்; என்பது, என்கிறது; இழுக்கு, குற்றம்.

பொழி. செய்யத்தக்க கருமத்தை ஆலோசித்துத் தொடங்கக்கடவர்; தொடங்கிய பின்பு, ஆலோசிக்கக்கடவோம் என்கிறது குற்றமாம்.

80. பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

பத. பெருமைக்கும், உயர்வுக்கும்; ஏனை, மற்றை; சிறுமைக்கும், இழிவுக்கும்; தத்தம், தம்தம்; கருமமே, செய்கையே, கட்டளைக்கல், உரைகல்.

பொழி. உயர்வுக்கும் இழிவுக்கும் அவரவர் செய்கையே உரைகல்.

81 தேறான் தெளிவுந் தெளிந்தான்க ணையுறவும்
தீரா விடும்பை தரும்.

பத. தேறான், ஆராயாமல்; தெளிவும், தெளிவதும்; தெளிந்தான், தெளிந்தவன்; கண், இடத்து; ஐயுறவும், சந்தேகித்தலும்; தீரா, நீங்காத; இடும்பை, துன்பம்; தரும், கொடுக்கும்.

பொழி. (அரசன் ஒருவனை) ஆராயாமல் தெளிதலும், ஆராய்ந்து தெளிந்தவனிடத்து சந்தேகித்தலும், (அவனுக்குத்) தீராத துன்பத்தைக் கொடுக்கும்.

82. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

பத. இகழ்ச்சியில், சோர்விலே; கெட்டாரை, கெட்டவரை; உள்ளுக, நினைக்க; தாம், தாங்கள்; தம், தமது; மகிழ்ச்சியின், மகிழ்ச்சியில்; மைந்து, வலி; உறும், படும்; போழ்து, பொழுது.

பொழி. தமது மகிழ்ச்சியில் பலப்படும்பொழுது, சோர்வி னாலே கெட்டுப்போனவரை நினைக்கக்கடவர்கள்.

83. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

பத. வெள்ள, நீரின்; தனைய, அளவு; மலர், பூ (வின் தாள்); நீட்டம், நீளம்; மாந்தர், மனிதர்; தம், தங்கள்; உள்ள, உள்ளத்து; தனையது, அளவினது; உயர்வு, உயர்ச்சி.

பொழி. நீரின் அளவேயாகும் பூத்தாளின் நீளம், மனித ருடைய ஊக்கத்தின் அளவேயாகும் அவர் உயர்ச்சி.

84. மடியை மடியா வொழுகல் குடியை
குடியாக வேண்டு பவர்.

பத. மடியை, சோம்பலை; மடியா, சோம்பலாக; ஒழுகல், நடக்கக்கடவர்; குடியை, குலத்தை; குடியாக, குலமாக; வேண்டுபவர், வேண்டுவோர்.

பொழி. (தாம்பிறந்த) குடும்பத்தைக் குடும்பமாக வேண்டு வோர், சோமபலைச் சோம்பலாகவே நினைத்து (முயற்சி யோடு) நடக்கக்கடவர்.

85. நெடுநீர் மறவி மடிதுயி னான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

பத. நெடு, நீட்டிக்கும்; நீர், தன்மை; மறவி, மறதி; மடி, சோம்பல்; துயில், தூக்கம்; நான்கும், நாலும்; கெடும், இறக்கும்; நீரார், தன்மையார்; காம, விருப்ப; கலன், மரக் கலம்.

பொழி. (விரைந்து செய்வதை) நீட்டிக்கும் தன்மையும், மறதியும், சோம்பலும், தூக்கமுமாகிய இந்த நான்கும் இறக்குந்தன்மையார் விரும்பியேறும் மரக்கலமாம்.

86. அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

பத. அருமை, அருமை; உடைத்து, உடையது; என்று, என்று; அசாவாமை, தளராதிருக்க; வேண்டும், வேண்டிய; பெருமை, பெருமையை; முயற்சி, முயர்சி; தரும், கொடுக்கும்.

பொழி. இத்தொழிலை முடித்தல் அருமையுடையதென்று தளராதிருக்க; முயர்சியானது வேண்டிய பெருமையைக் கொடுக்கும.

87. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

பத. முயற்சி, முயர்சியானது; திருவினை, திருவை; ஆக்கும், உண்டாக்கும்; முயற்றின்மை, முயற்சியில்லாமை; இன்மை, வறுமை; புகுத்திவிடும், அடைவித்துவிடும்.

பொழி. முயற்சி செல்வத்தை யுண்டாக்கும், முயற்சியில்லாமை வறுமையை அடைவித்துவிடும்.

88. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

பத. இடுக்கண், துன்பம்; படினும், பட்டாலும்; இளி, இகழ்வு; வந்த, வந்த; செய்யார், செய்யமாட்டார்; நடுக்கு, அசைவு; அற்ற, இல்லாத; காட்சியவர், அறிவுடையவர்.

பொழி. அசைவில்லாத அறிவுள்ளவர் துன்பப்பட்டா லும், இழிவைத் தருபவைகளைச் செய்யமாட்டார்.

89. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

பத. சொல்லுதல், சொல்லுதல்; யார்க்கும், எவர்க்கும்; எளிய, எளியன; அரிய, அரியன; ஆம், ஆகும்; சொல்லிய; சொன்ன; வண்ணம், விதம்; செயல், செய்தல்.

பொழி. சொல்லுதல் எவர்க்கும் எளிது, சொன்னபடி செய்தல் அரிது.

90. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

பத. துன்பம், இடுக்கண்; உற, மிக; வரினும், வந்தாலும்; செய்க, செய்யக்கடவர்; துணிவு, மனவலிமை; ஆற்றி, உண்டாக்கி; இன்பம், சுகத்தை; பயக்கும், தருகின்ற; வினை, தொழிலை.

பொழி. துன்பம் மிகவந்தாலும், சுகத்தைத்தரும் தொழிலை மனவலிமையாக்கிக்கொண்டு செய்யக்கடவர்.

91. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

பத. அடுத்தது, அடுத்ததை; காட்டும், காண்பிக்கும்; பளிங்கு, கண்ணாடியே; போல், போல; நெஞ்சம், மனம்; கடுத்தது, மிகுந்தது; காட்டும், காண்பிக்கும்; முகம், முகம்.

பொழி. அடுத்ததைக் காண்பிக்கும் கண்ணாடியைப்போல வே; முகம் நெஞ்சிலே யிருந்ததைக் காண்பிக்கும்.

92. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

பத. ஊதியம், பேறு; என்பது, என்று சொல்லப்படுவது; ஒருவற்கு, ஒருவனுக்கு; பேதையார், அறிவில்லாதவர்; கேண்மை, நட்பு; ஒரீஇ, ஒருவி; விடல், விடுதல்.

பொழி. அறிவில்லாதவருடைய நட்பை யொழித்துவிடுவது ஒருவனுக்கு இலாபம் என்று சொல்லப்படுகிறது.

93. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையாரில்.

பத. ஓதி, கற்றும்; உணர்ந்தும், அறிந்தும்; பிறர்க்கு, அந்நியருக்கு; உரைத்தும், சொல்லியும்; தான், தான்; அடங்கா, அடங்காத; பேதையின், மூடனைப்போல; பேதையார், மூடர்; இல், இல்லை.

பொழி. கற்றும் உணர்ந்தும் மற்றவர்க்குப் போதித்தும், தான் அடங்காத மூடனைப்போல மூடர் இல்லை.

94. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

பத. இகலிற்கு, மாறுபாட்டிற்கு; எதிர், எதிர்தலை; சாய்தல், ஒழிதல்; ஆக்கம், பெருக்கம்; அதனை, அதை; மிகல்

மிகுதல்; ஊக்கின், மேற்கொள்வானாயின்; ஊக்குமாம், மேற் கொள்ளுமாம்; கேடு, கேடு.

பொழி. மாறுபாட்டிற்கு எதிர்தலை ஒழிதல் பெருக்கம், அதனை மிகுதலை மேற்கொள்வானாயின் கேடு மேற்கொள் ளுமாம்.

95. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

பத. உடம்பாடு, மனப்பொருத்தம்; இலாதவர், இல்லா தவர்; வாழ்க்கை, வாழ்தல்; குடங்கருள், குடிசையுள்; பாம் போடு, நாகப்பாம்போடு; உடன், கூட; உறைந்தற்று, உறைந் ததன்மை.

பொழி. மனப்பொருத்தமில்லாதவரோடு வாழ்தல் குடி சையில் (நாகப்) பாம்போடுகூட இருந்ததன்மையாகும்.

96. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்
செய்தொழில் வேற்றுமை யான். [வா

பத. பிறப்பு, உற்பத்தி; ஒக்கும், சமமாகும்; எல்லா, எல்லார்; உயிர்க்கும், சீவனுக்கும்; சிறப்பு, பெருமை; ஒவ் வா, பொருந்தா; செய், செய்யப்பட்ட; தொழில், கருமம்; வேற்றுமையான், வேறுபாட்டால்.

பொழி. எல்லா உயிர்க்கும் பிறப்பொக்கும், செய்யப்ப ட்ட தொழில்களின் வேறுபாட்டால் சிறப்பு ஒத்திருக்காது.

97. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

பத. பெருமை, மாட்சிமை; பெருமிதம், செருக்கு; இன்மை, இல்லாதிருத்தல்; சிறுமை, சிறுமை; பெருமிதம், செருக்கு, ஊர்ந்துவிடல், நின்றுவிடல்.

பொழி. பெருமை செருக்கில்லாதிருத்தல், சிறுமை செருக்கடைதலிலே நின்றுவிடல்.

98. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

பத. நகல், மகிழ்தல்; வல்லார், வல்லவர்; அல்லார்க்கு, அல்லாதவர்க்கு; மா, மிக; இரு, பெரிய; ஞாலம், பூமி; பகலும், பகற்காலத்திலும்; பால், தன்மை; பட்டன்று, கிடந்ததன்மை; இருள், இருட்டு.

பொழி. (பண்பினால் ஒருவரோடுங்கலந்து) மகிழமாட்டாதவர்க்கு மிகப்பெரிய பூமியானது பகற்காலத்திலும் இருளில் கிடந்த தன்மையே.

99. கருமத்தா னாணுத னாணுத் திருநுத
னல்லவர் நாணுப் பிற.

பத. கருமத்தால், தொழிலால்; நாணுதல், வெட்குதல்; நாணு, வெட்கம்; திரு, அழகிய; நுதல், நெற்றி; நல்லவர், குலமகளிர்; நாணு, வெட்கம்; பிற, மற்ற.

பொழி. இழிந்த கருமத்தால் வருவது நன்மக்களது நாணம், (அது அன்றி) மனம் மொழி மெய் என்பவற்றின் ஒழுக்கத்தால் வருவன மற்ற நாணங்கள்.

100. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

பத. தெள், தெளிந்த, நீர், சலம்; அடு, சமைத்த; புற்கை, கூழ்; ஆயினும், ஆயினும்; தாள்தந்தது, சம்பாதிக்கப்பட்டதை; உண்ணலின், உண்ணுதற்கு; ஊங்கு, மேற்பட்ட; இனியது, இன்பஞ்செய்வது; இல், வேறில்லை.

பொழி. தன் முயற்சியாற் சம்பாதிக்கப்பட்டது தெளிந்த நீர்போன்ற கூழேயாயினும், அதைப் பொசிக்கிறதற்கு மேற்பட்ட இனிமையுடையது இல்லை.

முற்றிற்று.

L. S. PRESS, MADRAS—1926